# मनीषापञ्चकम्

## மனீஷா பஞ்சகம்

अन्नमयादन्नमयं अथवा चैतन्यमेव चैतन्यात् ।
यतिवर दूरीकर्तुं वाञ्छसि किं ब्रूहि गच्छ गच्छेति ।।

அன்னமயாதன்னமயம் அதவா சைதன்யமேவ சைதன்யாத் |
யதிவர தூரீகர்தும் வாஞ்சஸி கிம் ப்ரூஹி கச்ச கச்சேதி ||

துறவிகளுள் சிறந்தவரே, உடலிலிருந்து உடலையா அல்லது சைதன்யத்திலிருந்து சைதன்யத்தையா விலகிச் செல்ல விரும்புகிறீர்கள். போ! போ! என்று எதைக் கூறுகிறீர்கள்?

प्रत्यग्वस्तुनि निस्तरङ्गसहजानन्दावबोधाम्बुधौ
विप्रोऽयं श्वपचोऽयमित्यपि महान् कोऽयं विभेदभ्रमः ।
किं गङ्गाम्बुनि बिम्बितेऽम्बरमणौ चाण्डालवीथीपयः
पूरे वाऽन्तरमस्ति काञ्चनघटीमृत्कुम्भयोर्वाऽम्बरे ।।

ப்ரத்யக்வஸ்துனி நிஸ்தரங்கஸஹஜானந்தாவபோதாம்புதௌ
விப்ரோ யம் ச்வபசோ யமித்யபி மஹான் கோ யம் விபேதப்ரம: |
கிம் கங்காம்புனி பிம்பிதே ம்பரமணௌ சாண்டாளவீதீபய:
பூரே வா ந்தரமஸ்தி காஞ்சனகடீம்ருத்கும்பயோர்வா ம்பரே ||

அலையில்லா நீங்காத ஆனந்தமான அறிவுக்கடலான தன் ஆன்மாவில் இவன் ப்ராமணன், இவன் புலையன் இதுபோன்ற பெரிய வேற்றுமை எனும் தவறு எங்கிருந்து தோன்றியது. கங்கை நீரிலும், சண்டாளன் வீட்டு அருகில் உள்ள சாக்கடை நீரிலும் பிரதிபலிக்கின்ற ஸூர்யனிடத்தில் வேற்றுமை இருக்கிறதா! பொன் பானையிலும் மண் பானையிலும் உள்ள ஆகாசத்தில் வேற்றுமை இருக்கிறதா!



1. जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृम्भते
या ब्रह्मादिपिपीलिकान्ततनुषु प्रोता जगत्साक्षिणी।
सैवाहं न च दृश्यवस्त्विति दृढप्रज्ञापि यस्यास्ति चेत्
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम।।

ஜாக்ரத்ஸ்வப்ன ஸுஷுப்திஷு ஸ்புடதரா யா ஸம்விதுஜ்ஜ்ரும்பதே
யா ப்ரஹ்மாதிபிபீலிகாந்ததனுஷு ப்ரோதா ஜகத்ஸாக்ஷிணீ |
ஸைவாஹம் ந ச த்ருச்யவஸ்த்விதி த்ருடப்ரஜ்ஞாபி யஸ்யாஸ்தி சேத்
சாண்டாளோ ஸ்து ஸ து த்விஜோ ஸ்து குருரித்யேஷா மனீஷா மம ||

விழிப்பு நிலையிலும், கனவு நிலையிலும், உறக்க நிலையிலும் எந்தத் தூய அறிவு தெளிவாக வெளிப்படுகிறதோ, மேலும் உலகத்திற்கு ஸாக்ஷியாக எது ப்ரஹ்மா முதல் எறும்பு வரையுள்ள உடல்களில் ஊடுருவியுள்ளதோ அந்த அறிவே நான். பார்க்கப்படும் பொருள் நான் அல்ல என்ற இவ்விதமான உறுதியான ஞானம் யாருக்கு இருக்கிறதோ, அவர் சண்டாளனாக இருப்பினும் ப்ராஹ்மணனாக இருப்பினும் அவரே எனது குருநாதர் என்பது எனது உறுதியான ஞானம்.

2. ब्रह्मैवाहमिदं जगच्च सकलं चिन्मात्रविस्तारितं
सर्वं चैतदविद्यया त्रिगुणया सेशं मया कल्पितम्।
इत्थं यस्य दृढा मतिः सुखतरे नित्ये परे निर्मले
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम।।

ப்ரஹ்மைவாஹமிதம் ஜகச்ச ஸகலம் சின்மாத்ரவிஸ்தாரிதம்
ஸர்வம் சைததவித்யயா த்ரிகுணயா ஸேசம் மயா கல்பிதம் |
இத்தம் யஸ்ய த்ருடா மதி: ஸுகதரே நித்யே பரே நிர்மலே
சாண்டாளோ ஸ்து ஸ து த்விஜோ ஸ்து குருரித்யேஷா மனீஷா மம ||

நான் ப்ரஹ்மனாகவே இருக்கிறேன். இந்த முழு உலகமும் சைதன்யத்திடம் இருந்தே வெளிப்பட்டது. இறைவன் உட்பட இவை அனைத்தும் முக்குணமான அறியாமையின் துணைகொண்டு என்னால் கற்பிக்கப்பட்டுள்ளது. இவ்விதம் என்றுமுள்ள மேலான தூய்மையான ஆனந்த சொரூபமான ப்ரஹ்மனிடத்தில் உறுதியான ஞானம் யாருக்கு இருக்கிறதோ அவர் சண்டாளனாக இருப்பினும் ப்ராஹ்மணனாக இருப்பினும் அவரே எனது குருநாதர் என்பது எனது உறுதியான ஞானம்.

3. शश्वन्नश्वरमेव विश्वमखिलं निश्चित्य वाचा गुरोः
नित्यं ब्रह्म निरन्तरं विमृशतां निर्व्याजशान्तात्मनाम् ।
भूतं भावि च दुष्कृतं प्रदहतां संविन्मये पावके
प्रारब्धाय समर्पितं स्ववपुरित्येषा मनीषा मम ।।

சச்வந்நச்வரமேவ விச்வமகிலம் நிச்சித்ய வாசா குரோ:
நித்யம் ப்ரஹ்ம நிரந்தரம் விம்ருசதாம் நிர்வ்யாஜ சாந்தாத்மனாம் |
பூதம் பாவி ச துஷ்க்ருதம் ப்ரதஹதாம் ஸம்விந்மயே பாவகே
ப்ராரப்தாய ஸமர்பிதம் ஸ்வவபுரித்யேஷா மனீஷா மம ||

குருவின் உபதேசத்தால், அகில உலகமும் என்றும் அழியக்கூடியதே என்று உறுதி பூண்டு, மனத்தூய்மையும் மன அமைதியும் உடையவர்களாக, அழியாத ப்ரஹ்மனை என்றும் த்யானித்து கடந்த கால, வருங்கால வினைப்பயன்களும் பாபச் செயல்களும் அறிவு சொரூபமான நெருப்பில் எரிக்கின்றவர்களுடைய தன் உடல் ப்ராரப்த கர்மத்திடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது என்பது எனது உறுதியான ஞானம்.

4. या तिर्यङ्नरदेवताभिरहमित्यन्तः स्फुटा गृह्यते
यद्भासा हृदयाक्षदेहविषया भान्ति स्वतोऽचेतनाः ।
तां भास्यैः पिहितार्कमण्डलनिभां स्फूर्तिं सदा भावयन्
योगी निर्वृतमानसः स गुरुरित्येषा मनीषा मम ।।



யா திர்யங்நரதேவதாபிரஹமித்யந்த: ஸ்புடா க்ருஹ்யதே
யத்பாஸா ஹ்ருதயாக்ஷதேஹவிஷயா பாந்தி ஸ்வதோ சேதனா: |
தாம் பாஸ்யை: பிஹிதார்கமண்டலநிபாம் ஸ்பூர்திம் ஸதா பாவயன்
யோகீ நிர்வ்ருதமானஸ: ஸ குருரித்யேஷா மனீஷா மம ||

எந்த அறிவு சொரூபம், மிருகம் மனிதன் தேவர்கள் ஆகியவர்களால் நான் என்று தன்னுள் தெளிவாக உணரப்பட்டுள்ளதோ, எதன் ப்ரகாசத்தினால் ஜடமான தன்மை கொண்ட மனம், புலன்கள், உடல், பொருள்கள் போன்றவை விளங்குகின்றனவோ, தன்னால் விளக்கப்படுகின்ற மேகங்களால் மறைக்கப்படும் ஸூர்யனுடன் ஒப்பிடப்படும் அந்த அறிவு சொரூபத்தை எப்பொழுதும் த்யானிக்கின்ற, த்ருப்தியான மனதையுடைய யோகியானவர் எவரோ, அவரே எனது குருநாதர் என்பது எனது உறுதியான ஞானம்.

5. यत्सौख्याम्बुधिलेशलेशत इमे शक्रादयो निर्वृताः
यच्चित्ते नितरां प्रशान्तकलने लब्ध्वा मुनिर्निर्वृतः ।
यस्मिन्नित्यसुखाम्बुधौ गलितधीर्ब्रह्मैव न ब्रह्मवित्
यः कश्चित् स सुरेन्द्रवन्दितपदो नूनं मनीषा मम।।

யத்ஸௌக்யாம்புதிலேசலேசத இமே சக்ராதயோ நிர்வ்ருதா:
யச்சித்தே நிதராம் ப்ரசாந்தகலனே லப்த்வா முனிர்நிர்வ்ருத: |
யஸ்மின்நித்யஸுகாம்புதௌ கலிததீர்ப்ரஹ்மைவ ந ப்ரஹ்மவித்
ய: கச்சித் ஸ ஸுரேந்த்ரவந்திதபதோ நூனம் மனீஷா மம ||

எந்தப் பேரானந்தக் கடலின் சிறு துளியினால் இந்த இந்த்ரன் முதலியோர் த்ருப்தி அடைகிறார்களோ, முழுமையாக மாசு நீங்கிய மனதில் எதை அடைந்து முனிவர் மகிழ்ந்துள்ளாரோ அந்த அழிவற்ற பேரானந்தக் கடலில் கரைந்த மனதையுடையவன் ப்ரஹ்ம சொரூபமாகவே உள்ளானே அன்றி அவன் ப்ரஹ்மனை அறிந்தவன் மட்டும் அல்ல. இவர் யாராயினும் அவர் இந்த்ரனால் வணங்கத்தக்க பாதங்களை உடையவர் என்பது எனது உறுதியான ஞானம்.